உ

சிவமயம்.

# சாணக்கியநீதிவெண்பா.

CANAKYA NITHI VENBA

இது

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்

KUMARASWAMI PULAVAR, A

அ. குமாரசுவாமிப்புலவரவர்கள்

மொழிபெயர்த்து

இயற்றியது.

கோக்குவில் KOKKUVIL,

S. E. SIVARAMALINGAYYAR

ச. இ. சிவராமலிங்கையரால்

சோதிடப்பிரகாசயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.



பிரமாதீச௵ மாசிமீ.

1914.

உ

சிவமயம்.

# சாணக்கியநீதிவெண்பா.



இது

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்

அ. குமாரசுவாமிப்புலவரவர்கள்



மொழிபெயர்த்து

இயற்றியது.

கோக்குவில்

ச. இ. சிவராமலிங்கையரால்

சோதிடப்பிரகாசயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

பிரமாதீச௵ மாசி௴.

1914.

சிவமயம்.

# உபநியாசம்.

தமிழ்நாட்டு மாணவகர்கள் முதலிற் கற்று முறையறிந்தொழுகல் காரணமாகச் செஞ்சொல்லும், மென்றொடையும் நன்கமையச் செய்யுள் வடிவிற் செய்யப்பட்டிருக்கும் நீதிநூல்கள் எத்தனையோ பல. அவை ஆத்திசூடி, வாக்குண்டாம், நல்வழி, நன்னெறி திருக்குறள் நாலடியார் முதலியன. இவ்வாறே வடமொழியிற் செய்யப்பட்டிருக்கும் நீதிநூல்களும் பல. அவை நீதிசாரம், நீதிரத்தினம், நீதிப்பிரதீபம், நீதிசதகம், சாணக்கியசதகம், நவரத்தினம், குணரத்தினம் முதலியன. இவைகளை உலோகோபகாரமாக இயற்றி வைத்த சான்றோர்களுஞ் சாமானியரல்லர்; அருட்பேறும், உலகியலுணர்வும், வாக்குசித்தியும் வாய்ந்த மெய்ப்புலவர்.

இவருள்ளே வடமொழிப்புலவர்களுடைய நீதிநூல்களையுங் கற்கக் கருதி இப்பொழுது சாணக்கியசதகம் என்னும் நீதிநூலை இரண்டுமூன்று முறை நோக்கினும். மனோகரமாய் நின்று மகிழ்வித்தது. இது சாணக்கிய சூத்திரம் என்னும் நூற்கு வழிநூல். இது செய்தவர், சந்திரகுப்தமஹாராசாவின் மந்திரியாயிருந்த சாணக்கியபண்டிதர் என்பர். இவர் விஷ்ணுகுப்தர் எனவும் படுவர். இவர் இந்நூலிலே உலகியலுக்கியைந்த பலவகை நீதிகளையும் திருட்டாந்தங் காட்டி விரித்து விளக்கியிருக்கின்றனர். இந்நீதிகளெல்லாங் கற்குந்தோறும் மனமகிழ்ச்சியையும், அதிசயத்தையும், நற்புத்தியையுங் கொடுக்கும். இவற்றுள்ளே சில நீதிபாடங்கள் நீதிவெண்பா, வாக்குண்டாம், நான்மணிக்கடிகை, திருக்குறள்முதலிய நீதிநூல்களிலே வந்து பயின்றனவாயும், பல நீதிபாடங்கள் தமிழ் நூல்களிலே ஒருகாலும் வந்து பயிலாதனவாயும் இருக்கின்றன. வந்து பயின்றவைகளும் செயற்கைவிசேடத்தாலே புதியனவாய்த் தோன்றுகின்றன. ஆதலால் இந்நூலிலுள்ள நீதிகளெல்லாந் தமிழ்நாட்டு மாணவகர்க்குப் புதியனவாய்த் தோன்றிப் பயன்படும் என்று கருதி இதனை மொழிபெயர்த்து வெண்பாவிலமைத்து யாத்து முடித்தாம். இக்காரணம்பற்றியே சாணக்கியநீதிவெண்பா என்னும் பெயரும் இதற்காயிற்று.

# உபநியாசம்.

சதகத்திலுள்ள சுலோகப்பொருள்கள் தனித்தனியே ஒவ்வொருவெண்பாவில் அமைக்கப்பட்டிருக்கின்றன. சில சுலோகமுஞ், சிலபாகமும் சில சில காரணம்பற்றி இங்கே அமைக்கப்படவில்லை. அவைகளை ஆண்டுநோக்கி அறிக. இதுபோன்ற நீதிவிடயங்களெல்லாம் செய்யுணடையில் அமைந்துவருதலே எளிதிற் பயன்படற்குக் காரணமாகும். படிப்போரெல்லாம் படித்து நினைத்திருத்தற்கும், சுருங்கிய சொற்களால் விடயங்களை அறிதற்கும், அடி தொடை முதலியன நோக்கி அவாவிப் படித்தற்கும், செய்யுள் வடிவமே சிறந்த கருவியாகும். பாடற்சுவைகளையும் பண்டைநூல்களின் அருமை பெருமைகளையும் அறியாமாந்தர் சிலர் வாக்கியநடையில் ஆக்குதலை விரும்புவர். வருந்தித் தாங்கற்றன ஓம்புதற்கு வாக்கியநடையில் வழியாது? வாக்கிய நடை வர வர விரிவதன்றிச் சொற்பமான சொற்களாற் சுருங்கியும் முடியுமா! இரண்டு பங்கியிலே முடியும் ஒரு குறள் வெண்பா வாக்கியமாக்கும் போதும் அங்ஙனம் முடியுமா? வெகுதூரஞ் செல்லுமே! சென்றாலும் நினைவிலே நிலை பெறுமா? நெட்டுருச் செய்து நினைவில் வைத்துக்கொள்ளுதற்கேற்ற நீதிபாடமே எவரும் விரும்புவதாகும்.

இந்தச் சாணக்கியநீதிவெண்பாப் போல மஹாகவிகளாகிய பவபூதி, வாருசி, வேதாளபட்டர் முதலியோர் இயற்றிய குணரத்தினம், நீதிரத்தினம், நீதிப்பிரதீபம் முதலிய நீதிநூல்களுந் தமிழிற் பெயர்த்துச் செய்யுள் வடிவமாகச் செய்து முடிக்கப்படுமாயின், தமிழ்நாட்டு மாணவர்களுக்குத் தக்க உபகாரமாகும்.

இங்ஙனம்,

சைவப்பிரகாசவித்தியாசாலை
வண்ணார்பண்ணை:
பிரமாதீசஹு தைமீ.

அ. குமாரசுவாமிப்பிள்ளை.
சுன்னாகம்.

உ

# சிறப்புப்பாயிரம்.

நூலாசிரியர் மாணவகர்களுளொருவரும்
கொழும்பு
அரசினர் ஆசிரியகல்லூரித்
(Government Training College)
தமிழ்ப்பண்டிதருமாகிய
தென்கோவை
ஸ்ரீமான். ச. கந்தையபிள்ளையவர்கள்
இயற்றியது.

ஆசிரியவிருத்தம்.

உலகுபுகழ் வடமொழியி னுயர்சாணக் கியகவிஞ
னுரைத்த நீதி
குலவியநா லறம்பொருளைப் பத்தழகு நவரசமுங்
குதிகொண் டோங்க
நிலவுதமிழ் வெண்பாவி லவ்வைமொழி யிதுவென்று
நிலத்தோர் கொள்ளப் [னிற்
புலவர்புது விருந்துகொளப் பெயர்த்துரைத்தான் யாவனெ
புகலக் கேண்மோ.

மன்னியசெந் தமிழ்மொழியும் வடமொழியு மினிதுணர்ந்தோ
மாசில் வாய்மை [ன்
துன்னிமிகு குணக்குன்று கவிஞர்சிகா மணியாகத்
துலங்குந் தோன்றல்
பன்னுமெம்போல் வார்பலர்க்குப் பலகலைநா லளித்தருளும்
பரோப காரி
சுன்னையெனு நகராளி குமாரசுவா மிப்பெயர்கொள்
சுகுணன் மாதோ.

உ

சிவமயம்.

# சாணக்கிய நீதிவெண்பா.

## விநாயகவணக்கம்.

பொன்னுலகும் பூவுலகும் போற்ற வருள்புரியும்
முன்னவனா மானை முகனடிகள்—சென்னிவைத்தே
சாணக்கியநீதி சாரம் பெயர்த்துரைப்பாம்
யாணர்த் தமிழ்க்கவிகொண் டிங்கு.

---

### பண்டிதர்மேன்மை.

சொல்லணிசேர் கல்வித் துறைபோய பண்டிதர்தாம்
வெல்லுமிகல் வேந்தரினு மிக்கவர்காண்—சொல்லுங்கால்
வேந்தர்க்குத் தந்நாட்டின் மேன்மையுண்டாம் பண்டிதர்க்குச்
சேர்ந்தவிட மெல்லாஞ் சிறப்பு. (க)

### பண்டிதருயர்ச்சி.

* பேதையர்பான் மேவுவன வெல்லாம் பிழையாகும்
‡ மேதையர்பா லெப்பிழையு மேவாதே—ஆதலினாற்
பேதையர்கள் பன்னூறு பேருள்ளுங் கற்றுணர்ந்த
† மேதையுடை யானொருவன் மேல். (உ)

### பண்டிதரொழுக்கம்.

எவ்வுயிருந் தன்னுயிரே யென்றும் பிறன்பொருளைக்
கவ்வையுறு மண்ணினுறுங் கட்டியென்றும்—செவ்விபெறுந்
தன்மனைவி யல்லவளைத் தாயென்றுங் காண்பவனை
வன்மையுறு பண்டிதனா வை. (ங)

### பண்டிதர்குலம்.

தக்ககுலத் திற்பிறந்துஞ் சாற்றியநூல் கல்லானுக்
கக்குலத்தா லோர்பயனு மாவதில்லை—தக்ககுலம்
இல்லானே யானாலு மென்னகுறை கற்றோனை
எல்லாருங் கொள்வா ரினிது. (ச)

---

* பேதையர்=மூடர். ‡ மேதையர்=அறிஞர். † மேதை=அறிவு.

பண்டிதரல்லாதவர்.

உருவ மிளமை யுயர்ந்தகுடித் தோற்றம்
மருவினுமென் கல்வியிலா மக்கள்—ஒருசிறிதும்
வாசந் தராமுருக்கின் வண்மலரே போல்வரெனப்
பேசுவரே நூலோர் பிரித்து. (ரு)

சற்புத்திரன்.

* தாரகைக ளாலகற்றத் தான்முடியாப் பேரிருளை
ஈர § மதி யொன்றே யெளிதகற்றுஞ்—சீரதுபோல்
உத்தமனுய்ச் சற்குணனு யுற்றவொரு புத்திரனே
எத்துயருந் தீர்த்தொழிப்பா னீண்டு. (சா)

புத்திரபரிபாலனம்.

ஐந்துவய தாகுமட்டு மாதரவாய்ப் பேணுகவீ
ரைந்து வயததன்பி னுகுமட்டும்—மைந்தர்களைக்
கண்டிக்க வீரெட்டுக் காணுமேன் மித்திரன்போற்
கொண்டிடுக வேண்டாங் குறை. (எ)

தண்டனை.

மட்டில்லா வாதரவால் வந்திடுமே குற்றமெலாம்
இட்டமுறுந் தண்டனையா லெக்குணமுங்—கிட்டுமே
ஆதலான் மைந்தரையு மன்புற்ற சீடரையுங்
† கோதகலத் தண்டித்துக் கொள். (அ)

குணவான்.

நன்மணஞ்சேர் பூநிறைந்த நன்மரமொன் றுன்முற்றப்
பன்மரஞ்சேர் காடும் பரிமளிக்குந்—தன்மைபோன்
மிக்ககுண மெல்லாம் விரவுமொரு புத்திரனல்
அக்குலமும் மிக்குயரு மார்ந்து. (கூ)

குணமிலான்.

தீயமர மொன்றுநின்று செந்தீக் கிடனுகி
ஆயவன மெல்லா மழலாக்கும்—ஆயதிறம்
போலக் குணமில்லாப் புத்திரனுந் தன்குலத்தைச்
சாலக் கெடுத்தொழிப்பான் தான். (க0)

மூடன்வேடம்.

ஆண்டியா லேடீன யணியா லலங்கரித்துப்
பீடுபெற வந்த பெருமூடன்—நீடவையில்
எவ்வளவும் பேசா தடங்கி யிருப்பானே
அவ்வளவு மேன்மை யவற்கு. (கக)

* தாரகை=நட்சத்திரம். § மதி=சந்திரன். † கோது=குற்றம்.

### இழிவுளுயர்வு.

அழுக்குருட் செழும்பொன்னு *மாலத் தமுதும்
இழுக்குறு நீசனிடத் தேற்ற—விழுக்கலையுந்
தள்ளு மிழிகுலத்திற் றக்கவெழிற் கன்னிகையுங்
கொள்ளுந் தகையவெனக் கொள். (௧௨)

### சுற்றத்தவன்.

வேந்தர் கடைத்தலையில் வெம்போரி ‡னல்குரவில்
ஏய்ந்த துயரி லிடுகாட்டில்—வாய்ந்துவகை
பற்றும் விழாவிற் பரிவுகொண்டு நிற்பவனே
சுற்றத் தவனென்று சொல். (௧௩)

### மித்திரத்துரோகம்.

முன்னிலையி லின்சொன் மொழிந்து புறத்தேகி
நன்னிலைசேர் காரியங்க ளின்கழிக்க—உன்னுகின்ற
மித்திரனைப் பான்மிசையும் வெய்ய விடங்கீழும்
உய்த்தகுட மென்றே யொழி. (௧௪)

### கூடாநட்பு.

முன்னொரு தீங்கு முறைகடந்து செய்தவனைப்
பின்னரு நட்பாக்கும் பேதைசெயல்—என்னையோ
தேடி யவன்புரியுந் தீங்கெல்லாந் தான்றனக்குத்
தேடுகின்றான் பின்னுந் தெரிந்து. (௧௫)

### மறைபிறர்க்குரைத்தல்.

நம்புங் குணமிலியை நட்பாள னென்றெண்ணி
நம்பற்க வெங்கோப நண்ணுமேல்—நம்பினவன்
சொல்லா னென மறைவிற் சூழ்ந்து புரிந்தபிழை
எல்லாம் வெளிவிடுவா னீண்டு. (௧௬)

### அறியுமிடம்.

ஏவற் றொழிலவனை யேவ லிடத்தறிக
ஆபத்தின் மித்திரனை யாய்ந்தறிக—மேவுமனைப்
பைந்தொடியை நல்குரவின் பாலறிக தன்கிளைய
வெந்துயரின் பாலறிக மீட்டு. (௧௭)

### சத்துருவைவெல்லும்வழி.

கைத்தலத்து முட்கொண்டு காலி னடிமருவித்
தைத்தகடு முட்களையுந் தன்மைபோற்—சத்துருவின்
சத்துருவா லங்கவனைத் தான்களைந்து வேறுக்கல்
உத்தமமா மென்றுரைத்தா ரோர்ந்து. (௧௮)

---

* ஆலம்=நஞ்சு. ‡ நல்குரவு=வறுமை.

பகையுமுறவும்.

மண்ணி லொருவர்க்கு மற்றொருவர் வெம்பகையும்
நண்ணுறவு மாகி நடந்திடுதல்—எண்ணினில்லை
நேரும் பகையு நிகழுறவு மொவ்வொன்றே
காரணமாய் வந்தனுகுங் கான். (௧௯)

வஞ்சகன்.

நாக்கு நுனிக்க ணறுந்தேனு நெஞ்சகத்து
நீக்கரிய நஞ்சும் நிலைபெற்ற—தீக்குணத்தோன்
இன்சொ லுரைக்கின்று னென்றவனை நம்பாதே
என்சொலினுஞ் செய்வா னிடர். (௨0)

துர்க்குணன்.

பற்பலநூல் கற்றுணர்ந்த பண்டிதனே யானாலும்
நற்குணங்க ளெள்ளளவு நின்றாத—துர்க்குணனை
முற்று வெறுக்க முடிமேன் மணியிருந்தென்
புற்றரவைக் கிட்டார் புகுந்து. (௨௧)

திருந்ாதவன்.

சீறரவும் * மூர்க்கனுந் தீங்குபுரி வாரெனினுஞ்
சீறரவின் மூர்க்கனே தீயவன்கான்—சீறரவு
மந்திரத்தாற் கைவசமா மூர்க்கன் வசப்படுதல்
எந்தவிதத் தாலென் றியம்பு. (௨௨)

நற்பேறு.

இல்லா டரும்பே றிரும்புதல்வ.ரப்புதல்வர்
நல்குவது பிண்டமெனு நற்பேறு—செல்வந்
தரும்பேறு பற்பலவே தன்னுடைய நண்பன்
தரும்பே றினியதெனச் சாற்று. (௨௩)

நம்பத்தகாதவர்.

கூர்ந்த நக † விலங்கு கொம்புடைய மாடுபடை
சேர்ந்த கரத்தர் தெரிவையர்கள்—வேந்தர்குலம்
ஓடுநதி யென்றிவைக ளூறுசெயும் நம்பாதே
கூடுங்கா லாராய்ந்து கொள். (௨௪)

விலகுந்தூரம்.

ஆனைக்கு நீங்குமுழ மாயிரமே கொம்புடைய
ஏனை விலங்குகளுக் கீரைந்தே—வானிமிரும்
வாசிக் கொருநூறே துர்ச்சனர்க்கோ வைகுமிடம்
‡ ஆசறவிட் டோடுதலே யாம். (௨௫)

* மூர்க்கன்=மூடன். † விலங்கு=மிருகம். ‡ ஆசற=முற்ற.

விட்டுநீங்கல்.

உற்றகுலங் காத்தற் கொருபொருளைக் கைவிடலாம்
குற்றமிலூர் பேணக் குலம்விடலாம்—மற்றொருநா
டுய்யும் படிகாக்க வூர்விடலாந் தன்னுயிர்க்கு
வையகமுங் கைவிடலாம் மற்று. (௨௬)

நிலையிற்பிரிதல்.

பின்னொருவீ டாராய்ந்து பெற்றதற்குப் பின்னல்லான்
முன்னிருந்த வீடு முழுக்கவிடல்—நன்மையன்று
கற்றுணர்ந்த புத்திமான் காலொன்று செல்லவொன்றாற்
பற்றிநிற்ப னல்லுறுதி பார்த்து. (௨௭)

வசப்படுத்தும்வழி.

பண்டிதனை யுண்மை பகர்ந்தும் பெருங்கோபங்
கொண்டவனைக் கைகுவித்துக் கும்பிட்டும்—மிண்டுகுண
மூர்க்கனைப் பின்சென்றும் முற்றத் தனதுவசம்
ஆக்கலா மீதருமை யன்று. (௨௮)

மறைத்தற்பாலன.

நிந்தை பொருட்கேடு நெஞ்சத் துயர்பிறரால்
வந்து தனையடைந்த வஞ்சிப்பு—*புந்திமிக்கோன்
இல்லத் திழிந்தசெய லென்னு மிவையயலிற்
செல்ல வெளிப்படுத்த றீது. (௨௯)

நாணொழித்தல்.

உண்ணுந் தொழிற்கண்ணு மோதுந் தொழிற்கண்ணும்
எண்ணுதன தானியங்க ளீதலினும்—நண்ணுமுறை
பூணுந் தொழிற்கண்ணும் புத்திமா னெப்பொழுதும்
நாண மிலாதிருக்கை நன்று. (௩௦)

கைவிடுமிடம்.

கோதில் வயித்தியனுங் §கொற்றவனு நான்மறைதேர்
வேதியனுஞ் செல்வ மிகுந்தவனுஞ்—சீதளநீர்
†எவ்வ மிலாநதியு மெவ்விடத்தி லில்லையோ
அவ்விடத்தைக் கைவிடுக வாய்ந்து. (௩௧)

இதுவுமது.

கற்றோர் பெருமதிப்புங் கல்வி வரும்வழியும்
உற்றோரு மன்பா யுபசரிக்கை—பெற்றோரும்
இல்லா விடத்தி லிருக்கைவிடுத் தேகுதலே
நல்லோர் நெறியென்று நாடு. (௩௨)

---

* புந்தி=புத்தி. § கொற்றவன்=அரசன். † எவ்வம்=குறை.

சிந்தித்தகாரியம்.

செவ்வனுற நெஞ்சசத்திற் சிந்தித்த காரியத்தை
எவ்வெவர்க்கும் வாயா லியம்பற்க—இவ்வுலகிற்
பல்லோ ரறியிற் பழுதாம் பயன்படலும்
இல்லையெனச் சொன்னா ரெடுத்து. (௩௩)

பழிப்படுவே.

குற்றமுறுஞ் சீவனமுங் குற்ற முறும்பொருளுங்
குற்றமுறு நீர்நதியுங் குற்றமுறுஞ்—சிற்றுணவுங்
குற்றமுறு மில்லவளுங் கொள்ளப் படாவென்க
பற்றுமே கொள்ளிற் பழி. (௩௪)

முற்றுங்களைதல்.

வட்டிக் கடனும் வளர்நெருப்பும் வெம்பிணியுங்
‡ கட்டழித்தல் வேண்டுங் களைந்துகுறை—விட்ட துண்டேற்
சும்மா விடுமோ தொடர்ந்து முழுதழிக்கும்
அம்மா தடுத்த லரிது. (௩௫)

வானுலகவாழ்வு.

ஏவல் புரிவோனு மில்லாளும் புத்திரனும்
ஆவலொடுஞ் சொற்கேட் டமைகுவரேற்—பூவுலகே
வாழுமிட மானாலும் வானுலக வாழ்க்கையே
வாழலா மின்பமெலாம் வாய்ந்து. (௩௬)

பெருந்துயர்.

சொன்மறுக்கு மேவற் றொழிலவனுந் தீயநெறி
துன்னு மனையாளுஞ் துர்ச்சனன்பால்—மன்னுநட்பும்
ஊரரவம் வாழ்மனையு * முட்க வருமரண
காரணமே யென்றுரைத்தார் கண்டு. (௩௭)

நன்மனைவியுநற்றாயும்.

எல்லாருங் கைக்கொள்ளு மின்சொ லுரைக்குமனை
நல்லாளு மன்புடைய நற்றாயும்—இல்லாத
இல்லஞ் சுகந்தருவ தில்லை யிருக்கைகொள
நல்லமரக் காட்டகமே நன்று. (௩௮)

அழகுகொடுத்தல்.

தரங்குருவங் கெட்டார்க்குத் தக்ககல்வி யேயழகு
மாங்குயிலுக் கின்னிசையே மற்றழகு—தீங்ககன்ற
ஞானமுனி வோர்க்கழகு நற்பொறையே நல்லுறுதி
யானகற்பே பெண்டிர்க் கழகு. (௩௯)

‡ கட்டு=களைந்து. * உட்குதல்=அஞ்சுதல்.

பாழாதல்.

கற்கையிலாச் சீவனம்பாழ் * கான்முளையில் லாமனைபாழ்
திக்கிலுற வோர்களிலாத் திக்கும்பாழ்—தொக்கபொருள்
இல்லா வறியவருக் கெத்தநலம் வந்தடையும்
எல்லாம்பா ழென்றே யியம்பு. (௪0)

வீண்படல்.

வேதம் பயின்றோன் விரவாப் பிதிர்க்கடனும்
மாதக் கிணையில்லா மாமகமும்—காதனிலாச்
சேனைகளும் ‡ வந்தியெனச் செப்பு மழகுடைய
மானினியும் வீணென்றே வை. (௪௧)

அளவுகடந்தசெயல்.

மிக்கசெருக் காலிலங்கை வீந்தத மாவலியும்
மிக்ககொடை யாலரசு விட்டிழந்தான்—மிக்கபெரு
மானத்தாற் § கௌரவரு மாண்டா ரளவுகடந்
தானசெய தீங்கென் றறை. (௪௨)

குரு.

வேதியருக் கக்கினியே மிக்ககுரு வேதியர்கள்
ஆதியர்க்கு வேதியனே யான்றகுரு—மாதருக்குக்
கொண்டவனே வாய்த்த குருவிருந்தாய் வந்தடைந்து
கொண்டவனே யெங்குங் குரு. (௪௩)

தவப்பேறு.

உண்ணும் பொருளு முணவுவெறு மெய்ச்சுகமும்
எண்ணும் பெருந்தனமு மீந்துவக்குந்—திண்ணிலையும்
பெற்றொருவன் கொள்ளப் பெருமா தவம்வேண்டும்
அற்பதவத் தாருவன வன்று. (௪௪)

பெறற்கருமை.

ஒத்தொழுகு மில்லவளு முள்ளுவகை சேர்கிளையுஞ்
சத்தியமும் வேண்டுவன தந்துதவும்—புத்திரனும்
பெற்றுக் கொள்ளரிது பெற்றாற் பெறுஞ்சுகங்கள்
முற்றுமுள வென்றே மொழி. (௪௫)

அரிதாயிருத்தல்.

மன்னுமலை தோறுமிலை மாணிக்கஞ் சந்தனமுந்
துன்னு மடவியிடந் தோறுமிலை—மின்னுமுத்தும்
சொல்லானைக் கொம்பினடி தோறுமிலை நல்லோனும்
எல்லா விடங்களினு மில். (௪௬)

* கான்முளை=புத்திரன். ‡ வந்தி=மலடி. § கௌரவர்=குருகுலவேந்தர்.

துயரடையாதவர்.

வந்துணர்வு பெற்ற வறியவனுங் கற்றவனைப்
† பந்துவெனக் கொண்டவனும் பாலகரைத்— தந்துசுக்ஞ்
சேரு மமங்கலியுந் தீய துயரடையார்
சாருவரே யுண்மகிழ்ச்சி தாம். (சஎ)

துக்கப்பேறு.

நல்லறிவில் லாதவற்கும் நற்கலைகல் லாதவற்கும்
நல்லரசன் காவலிலா நாட்டவர்க்கும்—சொல்லினிய
மக்கட்பே றில்லாத மாந்தருக்கு மின்பமில்லைத்
துக்கப்பே றுண்டெனவே சொல். (சஅ)

தீங்குறுமை.

மேதையர்க்கு மித்திரனு மேற்குலத்து வந்தவன்பாற்
பேதமிலாத் தொடர்ச்சி பெற்றவனும்— ஞாதியர்பால்
ஒன்றிக் கலந்துசெறி வுற்றவனுந் தீங்குறுதல்
என்றுமிலை யென்றே யியம்பு. (சகூ)

கஷ்டசீவனம்.

யாதெனினுங் கைப்பொருடா னில்லாத வாணிகமுந்
தீதமரு நீசன்கீழ்ச் சீவனமும்— ஆதரவொன்
றில்லா நிலையு ‡ மிலம்பாடு மென்றிவைகள்
எல்லாந் துயரென் றியம்பு. (ருo)

ஒன்றற்கொன்று மாறு.

சோரன்பாற் புண்ணியமுந் துர்ச்சனன்பால் வான்பொறையுஞ்
சாரமிலாக் காமுகன்பாற் சத்தியமும்— § வாரமெலாஞ்
செப்பும் பொதுமகள்பாற் சிந்தையிடை நட்பும்
எப்படியு முண்டாவ தில். (ருக)

வலியாதல்.

வன்மை யிலார்க்குவலி மன்னவனே கள்வருக்குத்
தன்னுவலி பொய்வார்த்தை சொல்லுதலே—புன்மையுறும்
மூடன் றனக்குவலி மோனமே யென்றுரைத்தார்
தேடுமறி வுள்ளோர் தெரிந்து. (ருஉ)

இல்லாமை.

சேவகர்க்கு மானமில்லைத் தீயவர்க்கு நட்பில்லைப்
பாவையர்க்குக் கற்பும் பகரினில்லை— ஆர்வமறக்
கன்றுசினங் கொண்டவற்குக் காணுஞ் சுகமில்லை
என்றுரைத்தார் மேலோ ரெடுத்து. (ருங)

† பந்து=சுற்றம். ‡ இலம்பாடு=வறுமை. § வாரம்=அன்பு.

பேராசை.

நிலையான மெய்ப்பொருளை நீத்தகற்றி வேறு
நிலையாப் பொருடேடி நிற்போன்—நிலையான
மெய்ப் பொருளுங் கைவிடுவன் வேண்டு நிலையில்லா
அப்பொருளுங் கைவிடுவ னங்கு. (ருச)

ஆபரணம்.

தாரகைகட் காபரணஞ் சந்திரனே சுந்தரஞ்சேர்
நாரியர்கட் காபரண நாயகனே—பாருலகுக்
காபரணஞ் செங்கோ லரசனே யாவர்க்கும்
ஆபரணங் கல்வியே யாம். (ருரு)

உறவிற்பகை.

புத்திரனைக் கல்விப் பொருளூட்டி வையாத
*அத்தனுந் தாயு மரும்பகைவர்—புத்திரனும்
மிக்கோர் சபையில் விளக்கமுறா னன்னத்துட்
கொக்கேபோன் மேன்மை குலைந்து. (ருசா)

சிங்கத்தின் குணம்.

செய்யுந் தொழிலெவையுந் திண்ணம்பெற முயற்சி
செய்து நலமடையுஞ் சிங்கம்போல்—‡ வையகத்திற்
செய்யுந் தொழிலைச் சிறிதுபெரி தென்னாது
செய்க முழுமுயற்சி சேர்ந்து. (ருஎ)

கொக்கின் குணம்.

மீனம் வருமளவு மெய்யொடுக்கி நீர்க்கரையின்
மோனமுறுங் கொக்கின் முயற்சியெனத்—தானிருந்து
காலமிடம் வாய்த்திடுதல் கண்டு வினைபுரிக
சாலும் முழுமுயற்சி சார்ந்து. (ருஅ)

நாயின் குணம்.

பேராசை யற்பம் பெறினும் பெருமகிழ்ச்சி
பேராத வீரம் o பிரபுபக்தி—சோராமை
உற்றதுயில் வல்லே யுணர்ந்தெழுகை நாயினிடங்
கற்கத் தகுங்குணங்கள் காண். (ருகூ)

கழுதையின் குணம்.

ஓய்வின்றிப் பார முவந்து சுமந்திடுதல்
காய்வின்றி யென்றுங் களிப்புறுதல்—தோய்குளிரும்
சீறும் வெயிலுந் தெரியாமை யென்றிவைகள்
கூறுங் கழுதையிடங் கொள். (சா0)

* அத்தன்=பிதா. ‡ வையகம்=பூமி. o பிரபு=தலைவன்.

காகத்தின்குணம்.

சொல்லு மவதானஞ் சோம்பின்மை தான்மறைதல்
நல்லிரை தேடி நனிதிரட்டல்—சொல்லுமிவை
†காக்கை யிடத்திருந்து கற்கப் படுங்குணமாம்
நோக்கி யறிக நுனித்து. (௬௧)

கோழியின்குணம்.

போர்த்தொழிலுங் காலைப் பொழுதிற் றுயிலெழலும்
ஆர்த்து வரும்பெடையை யாபத்திற்—காத்திடலும்
உண்டி கிளைசேர வுண்டிடலுங் கோழியிடங்
கண்டு பெறுங்குணங்கள் காண். (௬௨)

நல்வார்த்தை.

வாணிகர்க்குத் தூரமில்லை வல்லவர்க்குப் பாரமெனக்
காணுவ தொன்றில்லைக் கற்றவர்க்குப்—பேணியுற்ற
நாடெல்லாம் வேறன்று நல்வார்த்தை சொல்வோர்க்குக்
கூடுபகை யில்லையெனக் கூறு. (௬௩)

ஐம்புலன்.

ஐம்புலனிற் செல்லுதலே யாபத்துச் சேர்வழியாம்
ஐம்புலனிற் செல்லா தடங்குதலே—‡சம்பத்துச்
சேரும் வழியாகுஞ் சிறப்பெதுவென் றோராய்ந்து
சேர்க வொருவழியிற் சென்று. (௬௪)

பெரும்பெலம்.

தொக்க பிணிபோலத் தோன்றும் பகையில்லை
மிக்ககல்வி போலுறவும் வேறில்லை—மக்களைப்போல்
வாய்ந்த பெருநட்பு மற்றில்லைத் தெய்வம்போல்
ஏய்ந்த பெரும்பெலமு மின்று. (௬௫)

மகளிரொழுக்கம்.

நாட்டுக்குக் காவ *னரபதியே பூமியெனும்
மேட்டுக்குக் காவல் விரிகடலே—வீட்டுக்குக்
காவல் §புடைமதிலே காணுங்காற் கன்னியர்க்குக்
காவ லொழுக்கமே காண். (௬௬)

மகளிர்செயல்.

உண்ண் விருமடங் குற்றபுத்தி நான்மடங்
கண்ணு றுறுமுயற்சி யாறுமடங்—கெண்ணுநசை
எட்டு மடங்காகு மேந்திழையார்க் கென்பதுவே
கட்டுரைத்த மேலோர் கருத்து. (௬௭)

† காக்கை=காகம். ‡ சம்பத்து=செல்வம். * நரபதி=அரசன். § புடை=பக்கம்.

நாணுமகிழ்வும்.

நாணும் ‡பொதுமகளு நாணாக் குலமகளும்
பூணு மகிழ்ச்சியுறாப் பூசுரனும்—பேணுதலாற்
கூடு மகிழ்ச்சியுறுங் கோமகனு மிவ்வுலகிற்
கேடுறுவா ரென்றே கிளத்து. (௬௮)

மதியாதவர்.

நற்குலத்திற் சேரா நரபதியும் மூடனிடம்
உற்பவித்துப் பண்டிதனென் றுற்றவனும்—அற்பபணம்
நூதனமாய்ப் பெற்றவனு நொய்யதுரும் பென்றுலகை
ஏதும் பொருட்படுத்தா ரீண்டு. (௬௯)

செல்வர்மதிப்பு.

அந்தணனைக் கொன்றவனே யாயினுமென் செல்வனையே
வந்தனைசெய் தெல்லாரும் வாழ்த்துவரால்—முந்துகுலம்
வந்தவனே யாயினுமென் வாய்ந்தபண மில்லானை
நிந்தனைசெய் வாருறவு நீத்து. (௭௦)

உற்றுழியுதவலின்மை.

பூண்டு மனம்வைத்துப் போற்றாது புத்தகத்திற்
காண்டலுற விட்ட ०கலையுணர்வும்—வேண்டலின்றி
மற்றொருவன் கைப்புகுந்த வான்பொருளுங் காரியங்கள்
உற்றபொழு தத்துதவா வுற்று. (௭௧)

பயங்கரம்.

வான்மருவுங் காற்றான் மரங்களுக்கும் வச்சிரத்தான்
மாமலைக்குந் தண்பனியால் †வாவியுறுந்—தாமரைக்குந்
துர்ச்சனனாற் சற்சனர்க்குந் தொல்லுலகி லெப்பொழுதும்
அச்சமுள தென்றே யறி. (௭௨)

அன்புறுபகைவர்.

பெற்றகட னீக்காப் பிதாவும் பிழைகொண்ட
பெற்றவளுங் கற்கை பெறுமகனும்—முற்றழகு
வாய்ந்த மனையவளும் வாரமுடை யாரெனினுஞ்
சார்ந்த பகைவரெனச் சாற்று. (௭௩)

சுரநோய்போல்வன.

வாசிக்குக் கூடதலு மானுடர்க்குச் சிந்தனையும்
*தூசுக்கு விண்மேற் சுடர்வெயிலும்—ஆசைமிகும்
மாதர்க்குக் காந்தன் மனவெறுப்புங் காய்சுரம்போற்
பேதப் படுத்துமெனப் பேசு. (௭௪)

‡ பொதுமகள்=வேசை. ० கலை=கல்வி. † வாவி=குளம். * தூசு=சீலை.

தெரிந்துவினையாடல்.

ஆய்ந்து பலநூ லறிந்தவனைத் தன்புடையில்
வாய்ந்த பணிசெய்ய வைத்திருக்கும்—வேந்தனிடம்
ஆன்ற பெருங்கீர்த்தி யான்றபொருள் வானுலகம்
மூன்றுமுறு மென்றே மொழி. (எரு)

தெரிந்துசெய்யாமை.

முற்று மறிவில்லா மூடனென வெண்ணாது
மற்றவனைத் தன்றொழிலில் வைத்திருக்கும்-கொற்றவன்பால்
ஆன்ற பொருட்கே டவமானம் பாழ்நரகம்
மூன்றுமுறு மென்றே மொழி. (எசு)

மூடர் கூட்டுறவு.

கோணுஞ் செயன்மூடர் கூட்டுறவா னல்லோர்கள்
பூணும் பெருங்குணங்கள் போய்மறையும்—சேணிலுறும்
மாமுகிலால் விண்மேல் வருங்†கதிரோன் றன்கிரணம்
போய்மறையுந் தன்மையது போன்று. (எஎ)

பெருந்துயர்.

வேற்றோர் மனைவிரும்பு மெல்லியலுஞ் சொற்கேட்டுப்
போற்றிப் பணிதலிலாப் புத்திரனும்—ஆற்றங்
கரைசேர் விளைநிலமுங் காணுங்கா லென்றும்
மரணத் துயர்கொடுக்கும் வந்து. (எஅ)

மகிழ்ச்சி.

ஏருழுவர் வாழ்மனையி லென்றுமுண வுண்டுபிணிச்
சோர்வுறூர்க் கென்றுஞ் சுகமுண்டு—வாரநெறி
தாங்கு மனைவி தலைவன் மனையிலென்றும்
ஓங்கும் பெரு மகிழ்ச்சி யுண்டு. (எகூ)

சோம்புத்தனம்.

யாசகத்தான் மானம்போம் யார்க்கு மிசைவற்ற
போசனத்தான் மேற்குலமும் போகுங்காண்—பேசசெல்வம்
இன்மையாற் புத்திபோ மெச்செயலுஞ் சோம்புபெறுந்
தன்மையாற் போயொளிக்குந் தான். (அ0)

நற்றுணை.

நன்விழலு நற்கனியு நண்ணு மொருமரத்தைத்
துன்னி யணுகிற் சுகமுண்டு—மன்னுதெய்வம்
மேவுங் கனியை விலக்கிடினு மங்கிழலை
யாவர் தவிர்ப்பா ரியம்பு. (அக)

† கதிரோன்=சூரியன்.

### பருவச்செயல்.

பாலியத்திற் கல்வி பயிலவில்லை யௌவனத்திற்
சில்முறும் பொருளுந் தேடவில்லை—சாலவதன்
பின்னறமுஞ் செய்யவில்லைப் பின்னர் நரைவ்ருமேல்
என்னொருவன் செய்யு மியல்பு. (௮௨)

### கூடாதகாரியம்.

தீண்டியுறு நாட்டினிதி தேடுதலுந் தீமையுறு
மாமகவாற் றென்புலத்தார் வான்கடனுந்—தீமையுறுஞ்
சீடனாற் கீர்த்தியுந் தீயமனை யாற்சுகமுங்
கூடுவார் யாவரெனக் கூறு. (௮௩)

### வீண்படல்.

பேணு மறிவில்லாப் பேய்ந்த மிட்மாதர்
காண வெளிப்பட்ட காரியமுஞ்—சேணொழுகும்
ஆற்றங் கரைமரமு மந்நியர்பாற் செல்பொருளும்
ஏற்றுப் பயன்படுவ தில். (௮௪)

### குளிருஞ்சூடும்.

ஆற்றியசெங் கல்வீடு மால மரநிழலும்
ஊற்றுள்ள *கூவ லுறுநீரும்—சாற்றிளமை
சாரு மடவரலுந் தண்மைதருங் கோடையினில்
மாரியினில் வெம்மைதரும் வந்து. (௮௫)

### விஷவருத்தம்.

மன்னன் பிறன்வசமாய் வைகி யொழுகுதலும்
அந்நியரை மாத ரவாவுதலும்—முன்னெழுந்து
காணுப் பெரும்பிணியுங் காரிருளிற் செல்லுதலும்
பேணு விஷமெனவே பேசு. (௮௬)

### இதுவுமது.

கற்கும் முறைதவறுங் கல்வி யழியாமை
பற்று மூணவு பணமில்லான்—நற்சபைபோய்த்
தானிருக்கை மூத்தோன் ‡தருணி மணம்புணர்தல்
ஆனவையும் வெவ்விடமே யாம். (௮௭)

### சார்பால்வருங்கேடு.

ஈனமிகும் வித்தா லிரும் ০புவிக்கு மேவலுறு
மானவன் செய்பிழையான் மன்னவற்கும்—தானிரவிற்
சென்றவற்கும் வாய்மை திறம்பு மடவாற்கும்
ஒன்றுமே கேடென்று ரோர்ந்து. (௮௮)

* கூவல்=கிணறு. ‡ தருணி=இளம்பெண். ০ புவி=பூமி.

### பிழையால்வருங்குணம்.

குலப்பிழையா லீயாக் குணமருவுஞ் செய்கை
நலப்பிழை யால்வறுமை நண்ணும்—†புலப்பிழைதான்
சேருமே தாய்பிழையாற் சேர்ந்தபிதா வின்பிழையாற்
சாருமே மூர்க்கத் தனம். (௮௯)

### புரோகிதன்.

வேதமுட னறங்க மிக்குணர்ந்தோ னுசிமொழி
ஏதமறச் சொல்லு மியல்புடையோன்—ஓதுமறை
சேர்ந்த செபம்வேள்வி செய்வோன் புரோகிதனும்
சார்ந்த வரசர் தமக்கு. (௯0)

### தருமவதிகாரி.

மேவுங் குலஞ்*சீல மிக்கோன் தருமநெறி
யாவும் விரும்பு மியல்புண்டையோன்—ஏவிக்
கரும முடிப்போன் கலைஞன் குணவான்
தருமவதி காரியெனச் சாற்று. (௯௧)

### வைத்தியன்.

ஆயுர்வே தப்பயிற்சி யார்வ மிருங்காட்சி
தாயொக்கு மன்பு தயைமுதலாய்—மேயகுணஞ்
சாற்றொழுக்க மென்பவைகள் சார்ந்தோ னெவர்களுக்கும்
ஏற்ற வயித்தியனென் றெண். (௯௨)

### எழுத்தாளன்.

சொல்வ தொருமுறையிற் சோராமற் கொண்டெழுத
வல்லோன் ‡கரவேகம் வாய்ந்துள்ளோன்—பல்பலநூல்
பார்த்தறிந்தோன் வல்விரைந்து பன்னு மெழுத்தறிவோன்
வாய்த்தவெழுத் தாளனென வை. (௯௩)

### சேனாபதி.

வீரன் பெலவான் விவேகி தருமநூற்
§பாரங் கடந்தோன் பரிமுதலாம்—ஊர்திகளைத்
தானடாத்தித் தகைசேர் புகழ்பெற்றோன்
சேனா பதியென்று செப்பு. (௯௪)

### தூதுவன்.

ஏர்க்கு வலிமிக்கோன் வல்லறிஞன் மற்றொருவர்
நோக்கம் விரைந்து நுனித்தறிவோன்—மேக்குயரும்
தீர னினைப்பாளன் செப்புமொரு தூதுவனுஞ்
சாரமிகு வேந்தர் தமக்கு. (௯௫)

---

† புலம்=அறிவு. * சீலம்=ஒழுக்கம். ‡ கரம்=கை. § பாரம்=கரை.

பாசகன்.

பூணும் பெலமிகுந்தோன் புத்திரன்போற் பற்றுடையோன்
காணும் வலியமைந்த காயத்தோன்—பேணுஅறம்
வாலுவநூல் கற்றோன் மதுரம் பெறச்சமைப்போன்
† வாலுவனே யாவனென வை. (௬௬)

வாயிற்காவலன்.

*பெட்புற்றுக் காண்போன் பெலவா னவதானி
கட்புருவ மாதிகொண்டு காணவரும்—உட்குறிப்பை
ஆயுமறி வாள னதிவீரன் வேந்தர்மனை
வாயிலுறுங் காவலனும் வாய்ந்து. (௬௭)

இயற்கை.

வாய்த்துத் தனக்கியல்பாய் வந்தவறி வில்லாற்குச்
சாத்திரங்க ளென்செய்யுந் தானகப்—பார்த்துணருங்
கண்ணில்லாப் பாவிக்குக் கண்ணாடி யென்செய்யும்
எண்ணுங்கா லெல்லா மிருட்டு. (௬௮)

பிரசங்கம்.

சொல்லாற் பிரசங்கஞ் சொல்வோ னதுகேட்போர்
இல்லா வவைக்களத்தி லென்செய்யும்—சொல்லாடை‡
நண்ணுத் துறவோர்க ணண்ணும் பதியகத்து
வண்ணானுக் கென்ன வழக்கு. (௬௯)

நவையுறாமை.

சீரணஞ்சேர் போசனமுஞ் சென்று முதிர்வடைந்த
தாரமும் வீடுவந்த தானியமும்—போரிடைப்போய்
வெற்றியொடு வந்த வீரனுமூர் சொல்லுநவை
பற்றப் படுவதில்லை பார். (௭௦)

வாழி.

வாழி மறையாளர் வாழி பசு நிரைகள்
வாழி முகிலுடனே மன்னவர்கள்—வாழுநெறி
பூணக் கலைபயிலும் புண்ணியர்க டாம்வாழி
சாணக் கியநீதி சார்ந்து.

**சாணக்கிய நீதிவெண்பா முற்றிற்று.**



---

† வாலுவன்=உணவு சமைப்பவன். * பெட்பு=விருப்பம். ‡ ஆடை=சீலை.